இ - ள். கையைவிட்டுப்போவனவாக திரண்டதொடியும்; ஊரிலுள்ளாரும் பழிதூற்றுக; இதழ்விரியுந்தாழை நீர்த்துறையெல்லாம் மணநாறச் சங்குபோல் மலரும் பொலிந்தகடற்கானலையுடையசோப்பன் தனிமைகொண்ட மயக்கமுடைத்தான மாலைக்காலத்துப் போகான்; என்னெஞ்சத்திடத்து நிலைபெற்று. எ - று. (௩)

௩0௬.—வரவெதிர்ந்திருத்தல்:—

முகைபுரை முறுவன் முள்ளெயிற் றரிவை
வகைபுனை வளமனை வரவெதிர்ந் தன்று.

இ - ள். முல்லையரும்பன்ன நகையாற்சிறந்த கூரியபலலினையுடைய மடவாள் பலகூறுபடக் கைசெய்த செல்வம மயிடத்தே தலைவன்வருதலை ஏற்றிருந்தது. எ - று.

வ - று. காம நெடுங்கட னீந்தும் மாசைபுனைந்த
பூமலி சேக்கைப் புணைவேண்டி - நீமலிந்து
செல்லாய் சிலம்பன் வருதறகுச் சிந்தியா
யெல்லாக நெஞ்ச மெதிர்.

இ - ள். ஆசையாகிய பெரிய கடலைநீந்தும்படித்தக கைசெய்யப்பட்ட மலர்மிக்க சயனத்திடத்துக் கூடமாகிய தெப்பத்தைவேண்டி நீ விரைந்து போகாய்; தலைவன் இவ்விடத்துவருதற்கு நினையாய்; மயக்கம் நீங்கி விளக்கமுற என்னெஞ்சே, எதிரே. எ - று.

திர் செல்லாயென்க. (௪)

௩௧0.—வாராமைகழிதல்:—

நெடுவேய்த் தோளி நிமிர்ந்தும் வேறுபட
வடிவே லண்ணல் வாராமைக் கழிந்தன்று.

இ - ள். உயர்ந்த மூங்கில்போலுந்தோளி மிகவும், சொல்லுவிகற்பத்தாலே வடித்த வேலினையுடையதலைவன் வாராமையாலே அதற்கு அழுங்குதது. எ - று.

வ - று. நுடங்கருவி யார்த்துழியு நோக்கருஞ் சாரல்
*விடங்கழி மான்மாலை மெய்லைத் - தடம்பெருங்கண்
டாரார மார்பன் றமியே னுயிர்தளர
வாரான்கொ லாடும் வலம்.

இ - ள். அசையும் மலையருவி ஆரவாரித்தவிடமும் பார்த்தற்கரிய மலைப்பக்கத்து இராகவேகத்தையுண்டாக்கும் மயக்கமுடைய மாலையளவிலே மிகப் பெரிய கண்ணனது, மாலையாற்சிறந்த ஆரமார்பன் தனியேனுடைய உயிர் மெலிய வாரான் போலும்; வலம் துடியாநின்றது. எ - று.

தடம்பெருங்கண் வலமாடுமென்க. (௫)

* சிலப். 10: 219 - 20, அடியார். உரை; மணி. 10: 22, 18: 119.

ருகக.—இரவுத்தலைச்சேறல் :—

காண்டல் வேட்கையொடு கனையிருண் டோண்
மாண்ட சாயன் மனையிறந் தன்று.

இ - ள். தலைவனைக் காணவேண்டுமென்னும் ஆசையோடு செறிந்த இருளையுடைய ஒத்த யாமத்து மாட்சிமைப்பட்ட மென்மையாள் தன் இல்லினின்றும் இறந்தது. எ - று.

வ - று. *பணையா வறைமுழங்கும் பாயருவி நாடன்
பிணையார மார்பம் பிணையத் - துணையாய்க்
கழிகாம முய்ப்பக் கனையிருட்கட் செல்கேன்
வழிகாண மின்னுக வான்.

இ - ள். வீரமுரசென்னக் கற்பாறையிடத்து ஒலிக்கும் பரந்த அருவியாற் பொலிந்தநாடன் மூட்டுவாயினையுடைய ஆரமார்ந்த தையைத் தழுவ எனக்குத் துணையாய் மிக்கஆசை செலுத்தச் செறிந்த இருளிடத்துப்போவேன், நெறியைக்காண மின்னுவதாக, மேகம். எ - று. (சு)

ருகஉ.—இல்லவைநகுதல் :—

இல்லவை சொல்லி யிலங்கெயிற் றரிவை
நல்வய லூரனை நகைமிகுத் தன்று.

இ - ள். உள்ளனவலாதவற்றையுரைத்து விளங்கும் பல்லினையுடைய மடவாள் அழகியபழனஞ்சூழ்ந்தவூரனை நகையைப்பெருக்கியது. எ - று.

வ - று. முற்றா முலையார் முயங்க விதழ்குழைந்த
நற்றா ரகல நகைதரலி - னற்றார்
கலவே மெனநேர்ந்துங் காஞ்சிநல் லூர
புலவேம் பொறுத்த லரிது.

இ - ள். இளமுலையினையுடையார் தழுவப் பூந்தார்வாடின அழகிய மாலையினையுடைய மார்பம் சிரிப்பைத்தருதலின், அழகியமாலையினை மணவேமென நிச்சயித்தும் காஞ்சிமரத்தினையுடைய அழகியவூரனே, ஊடேம்; நின்னுடன் ஊடின், ஆற்றுதலரிது. எ - று.

அரிது ஆதலிற் புலவேம். (எ)

ருகரு.—புலவியுட்புலம்பல் :—

நலவளை மடந்தை நற்றார் பரிந்து
புலவி யாற்றாள் புலம்புற் றன்று.

இ - ள். அழகிய தொடியினையுடையமடவாள் தலைவன்மார்பின் மாலையை அறுத்து ஊடலாற்றாளாய்த் தனிமையுற்றது. எ - று.

* தொல். அகத். சூ. 54 - இளம். மேற்.

வ - று. ஓங்கிய வேலான் பணியவு மொள்ளிழை
தாங்காள் வரைமார்பிற் றார்பரிந் - தாங்கே
யடும்படர் மூழ்கி யமைமென்றோள் வாட
நெடும்பெருங்க ணீந்தின நீர்.

இ - ள். உயர்ந்தவேலினையுடையான் வணங்கவும் ஒள்ளியஆபரணத்தினையுடையாள் கோபத்தைத்தடாளாய் மலையன்ன அகலத்தின்மாலையை யறுத்து அவ்விடத்திலே வருத்துந்துயரத்திலே அழுந்தி மூங்கில்போன்ற மெல்லியதோள்கள் மெலிய நெடியவாய்ப் பெரியவாகிய கண்கள் நீரிலே மிதந்தன. எ - று. (அ)

நகச.—பொழுதுகண்டிரங்கல் :—

நிற்ற லாற்றா ணெட்டுயிர்த் தல்மரும்
பொற்றொடி யரிவை பொழுதுகண் டிரங்கின்று.

இ - ள். உயிர்நிற்றலைப்பொறாளாய் நெட்டுயிர்ப்புக்கொண்டு சுழலும் பொன்னாற்செய்த வளையினையுடைய தலைவி மாலைப்பொழுதைக்கண்டு வருந்தியது. எ - று.

வ - று. இறையே யிறந்தன வெல்வளை யுண்க
ணுறையே பொழிதலு மோவா - நிறையைப்
பருகாப் பகல்கரந்த பையுள்கூர் மாலை
யுருகா வுயங்கு முயிர்.

இ - ள். கையிறையைக்கடந்தன, விளக்கத்தினையுடையதொடிகள் ; மையுண்டவிழிகள் துளியைச்சொரிதலும்ஒழியா ; என் நிறையையுண்டு ஆதித்தனொளித்த நோய்மிகும் மாலைக்காலத்துக் கரைந்துவருந்தாநிற்கும், பிராணன். எ - று. (௯)

நகரு.—பரத்தையையேசல் :—

அணிவய லூரனொ டப்புவிழ வமரும்
பணிமொழி யரிவை பரத்தையை யேசின்று.

இ - ள். அழகியபழனத்தையுடைய ஊரனுடனே நீர்விளையாட்டுவிரும்பும் மெல்லியசொல்லினையுடைய தலைமகள் பரத்தையைப்புல்லற்கூறியது. எ - று.

வ - று. யாமுயங்கு மென்முலையால் யாணர் வயலூரன்
றேமுயங்கு பைந்தார் திரைமுயங்க - யாமுயங்க
வெவ்வையர் சேரி யிரவு மிமைபொருந்தாக்
கவ்வை கருதிற் கடை.

இ - ள். யாம் பொறையாற்றாதுவருந்தும் மெல்லியகொங்கையாலே புதுவளப்பத்தினையுடைய கழனியால்நிறைந்த ஊரனது தேன்தழுவும் செவ்வி

மாலையைப் புன்றிரை தழு ரங்கிற் யார்தழுவாநிற்ப, இதற்கு எந்தங்கைய ராகிய பரத்தையர்சேரி பலரும்உறங்கும் இரவும் கண்ணிமைகூடாத ஆரவார த்தைநினைப்பிற் சாலப் புல்லியது. எ - று. (௧௦)

௩௧௬.—கண்டுகண் சிவத்தல் :—

உறுவரை மார்ப னொள்ளிணர் நறுந்தார்
கறுவொடு மயங்கிக் கண்சிவந் தன்று.

இ - ள். பெரியமலைபோலு மகலத்தினையுடையவனது ஒள்ளிய கொத்தினையுடைய நறிய மாலையைக் கண்டே கலங்கித் தலைவி கோபித்தது. எ - று.

வ - று. கூடிய கொண்கன் குறுகக் கொடிமார்பி
னூடிய சாந்தி னணிகொடார்ந்து - வாடிய
தார்க்குவளை கண்டு தரியா ளிவண்முகத்த
கார்க்குவளை காலுங் கனல்.

இ - ள். மணந்தகொழுநன் அணுகக் கொடியன்னயாள் மார்பிடத்துத் தோய்ந்த சந்தனத்தின் அழகுமேனி செவ்வியழிந்த செங்கழுநீர்மாலையைக் கண்டு பொறாவாய் இவளுடையமுகத்தின் செவ்விகருவளையாகியகண்கள் அழலைச்சொரியும் எ - று (௧௧)

௩௧௭.—காதலிற் களித்தல் :—

மைவரை நாடன் மார்பகம் பொருந்திக்
கைவிட லறியாக் காதலிற் களித்தன்று.

இ - ள். மேகம்பொருந்தின மலைநாடனுடைய மார்பிடத்தேமேவி நீங் குதலறியாத அன்பினாலே மகிழ்ந்தது. எ - று

வ - று. காதல் பெருகிக் களிசெய்ய வர்களியாற்
கோதையுந் தாரு மிடைகுழைய - மாதர்
கலந்தாள் கலந்து கடைக்கண்ணாற் கங்குல்
புலந்தாள் புலரியம் போது.

இ - ள். அன்புமிக்குக் களிப்புச்செய்ய அம்மகிழ்ச்சியால மாலையும் கோதையும் நடுவேவாடக காதலியையுடையாள் கூடினாள்; கூடிக் கடைக்கண் ணாலே நோக்கி இரவுப்பொழுதைமுனிந்தாள், விடியற்காலத்து. எ - று.
கங்குல்கழிந்ததென்று புலந்தாள். (௧௨)

௩௧௮.—கொண்டகம்புகுதல் :—

காதல் பெருகக் கணவனைக் கண்ணுற்றுக்
கோதையாற் பிணித்துக் கொண்டகம் புக்கன்று.

இ - ள். அன்புமிகக் கொழுநனைக்கண்டு மாலையாற்கட்டி அகத்திலே கொண்டுபுக்கது. எ - று.

வ - று. கண்டு களித்துக் கயலுண்க ணீர்மல்கக்
கொண்டகம் புக்காள் கொடியன்னாள் - வண்டினங்
காலையாழ் செய்யுங் கருவரை நாடனை
மாலையான் மார்பம் பிணித்து.

இ - ள். தலைவனைக்கண்டுமகிழ்ந்து கயல்போன்ற மையுண்டகண் நீர் மிக அகத்திலேகொண்டுபுக்காள், வல்லியனையாள் ; சுரும்பினங்கள் காலைப் பொழுதிலே யாழ்போலவிசைக்கும் கரியமலைநாடனைத் தாராலே அகலத்தைக் கட்டிக்கொண்டு. எ - று.

பிணித்துக் கொண்டகம்புக்கா கொடியன்னாளெனக. (கங)

ங௧௧.—கூட்டத்துக்குழைதல் :—

பெய்தா ரகலம் பிரித லாற்றுக்
கொய்தழை யல்குல் கூட்டத்துக் குழைந்தன்று.

இ - ள். இட்டமாலையினையுடைய அகலத்தை நீங்குதல்பொறாத பறித்த தழையாற்சிறந்த அல்குலினையுடையாள் புணர்ச்சியிடத்து நெகிழ்ந்தது. எ - று.

வ - று. மயங்கி மகிழ்பெருக மால்வரை மார்பிற்
றயங்கு புனலூரன் றண்டார் - முயங்கியும்
பேதை புலம்பப் பிரிதியோ நீயென்னுங்
கோதைசூழ் கொம்பிற் குழைந்து.

இ - ள். மனங்கலங்கிக் களிப்புமிகப் பெரிய வரைபோன்ற மார்பினையுடைய அசையும்புனலூரன்றன் குளிர்ந்தமாலையைத் தழுவியும் மடவாள் யான் தனிமைப்பட நீபிரிகின்றாயோவென்றுசொல்லும் ; மாலைசுற்றின பூங் கொம்புபோலத் தளர்ந்து. எ - று.

தளர்ந்து நீபிரிதியோவென்னும். (கச)

ங௨0.—ஊடலுணைகிழ்தல் :—

நள்ளிருண் மாலை நடுங்கஞர் நலிய
வொள்வளைத் தோளி யூடலு ணெகிழ்ந்தன்று.

இ - ள். செறிந்தஇருளையுடைய மாலைக்காலத்துத் துளங்காநின்ற துயரநெருக்க ஒள்ளியதொடியாற்சிறந்த தோளினையுடையாள் வழக்காட்டிடத்துக் குழைந்தது. எ - று.

வ - று. தெளிவின்றி யூடத் தெரிந்துநங் கேள்வர்
பிரிவின்றி நல்கினும் பேணாய் - திரிவின்றித்
துஞ்சே மெனமொழிதி தூங்கிருண் மான்மாலை
நெஞ்சே யுடைய நிறை.

இ - ள். குற்றமொன்றும் ஆராயாது நாம் ஊட, விசாரித்து நம்கொழுநர் நீங்குதலின்றியே தலையளிபண்ணினும் விரும்பாயாய் வேறுபாடின்றி உறங்கேமெனச் சொல்லாநின்றாய் ; தங்கும் இருளையுடைய மயக்கத்தைச்செய்யும் மாலைக்காலத்து, மனமே, நிறையுடையை நீ. எ - று. (கரு)

௩உக.—உரைகேட்டுநயத்தல் :—

துயரொடு வைகிய சூழ்வளைத் தோளி
யுயர்வரை நாட னுரைகேட்டு நயந்தன்று.

இ - ள். துன்பத்தோடுதங்கிய சூழ்ந்த தொடியினையுடையதோளி உயர்ந்த மலைநாடன் றன்வார்த்தையைக் கேட்டுவிரும்பியது. எ - று.

வ - று. ஆழ விடுமோ வலரொடு வைகினுந்
தாழ்குரலேனற் றலைக்கொண்ட - நூழில்
விரையாற் கமழும் விறன்மலை நாட
னுரையாற் றளிர்க்கு முயிர்.

இ - ள். துயரக்கடலுள்ளே அழுந்தவிடுமோ ; பிறர்தூற்றும் பழியோடுதங்கினும் குனிந்தகதிரையுடைய தினையிலே மணந்த நூழிலென்னும் வல்லியினுடைய மணங்கமழும் வெற்றியானமைந்த வரைநாடன்வார்த்தையாலே தளிர்க்கும் என்னுயிர். எ - று.

உயிர் ஆழவிடுமோ. ஆல், அசை. (கசு)

௩உஉ.—பாடகச்சீறடிபணிந்தபினிரங்கல் :—

கோடுயர் வெற்பன் கூப்பிய கையொடு
பாடகச் சீறடி பணிந்தபி னிரங்கின்று.

இ - ள். குவடு நீண்ட மலையினையுடையவன் குவித்தகையுடனே பாடகமணிந்த சிற்றடியிலே வணங்கியபின்பு நெஞ்சுநெகிழ்ந்தது. எ - று.

வ - று. அணிவரு பூஞ்சிலம் பார்க்கு மடிமேன்
மணிவரை மார்பன் மயங்கிப் - பணியவும்
வற்கென்ற நெஞ்சம் வணங்காய் சிறுவரை
நிற்கென்றி வாழியர் நீ.

இ - ள். அழகுமிகும் பொலிந்தசிலம்பு ஆரவாரிக்கும் அடிமேலே அழகிய வரைபோன்ற அகலத்தையுடையவன் கலங்கிவணங்கவும் வலிமையுற்ற மனமே, வணங்காயாய்ச் சிறியகாலை ஊடநீராதேநிற்பனென்று சொல்லாநின்றாய்; வாழ்வாயாக நீ. எ. - று.

வாழியரென்பது, நகை. (கஎ)

௩உ௩.—பள்ளிமிசைத்தொடர்தல் :—

மாயிருங் கங்குன் மாமலை நாடனைப்
பாய னீவிப் பள்ளிமிசைத் தொடர்ந்தன்று.

இ - ள். மிகவும் பெரியகங்குலிடத்துப் பெரிய வரைநாடனை உறக்கத்தை யொழிந்து சயனத்திலேபற்றியது. எ - று.

வ - று. யானை தொடருங் கொடிபோல யானுன்னைத்
தானை தொடரவும் போதியோ - மானை
மயக்கரிய வுண்கண் மடந்தைதோ ளுள்ளி
யியக்கருஞ் சோலை யிரா.

இ - ள். யானையைப்பற்றும் வல்லிபோல நின்னை யான் புடைவையைப் பற்றவும் போகின்றயோ; மானைமயக்கும் செவ்வரிகருவரிபரந்த மையுண்டகண்ணையுடைய மடவாள்தன் தோளைக்கருதி உலாவுதற்கரிய சோலையிடத்து இராப்பொழுதிலே. எ - று.

தானைதொடரவும் போதியோ. (கஅ)

கஉச.—சேல்கெனவிடுத்தல்:—

பாயிருட் கணவனைப் படர்ச்சி நோக்கிச்
சேயிழை யரிவை செல்கென விடுத்தன்று.

இ - ள். பரந்த இருட்காலத்துக் கொழுநனைச் செலவைப்பார்த்துச்சிவந்த ஆபரணத்தினையுடையதலைவி போவாயாகவென்று சொல்லியது. எ - று.

வ - று. விலங்குந ரீங்கில்லை வெண்வேலோய் சென்றீ
யிலங்கிழை யெவ்வ நலியக் - கலங்கிக்
குறியுள் வருந்தாமைக் குன்றுசூழ் சோலை
நெறியுள் விரிக நிலா.

இ - ள். நின்னைப் போகாமலேவிலக்குவார் இவ்விடத்து ஒருவருமிலலை; வென்றிவேலினையுடையோய், செல்வாயாக; விட்டுவிளங்கும் ஆபரணத்தையுடையாள் துன்பநெருக்க மயங்கிக் குறியிடத்து நின்னைக்காணாதுவருந்தமுறுதபடி மலைசுற்றினசோலையிடத்து வழியுள்ளே விரிவதாக, நிலா. எ - று.

விரிகநிலா; வெண்வேலோய்சென்றீ. (கக)

பெருந்திணைப் படலத்துட் பெண்பாற்கூற்று முற்றிற்று.



## [இருபாற்பெருந்திணை.]

(கஎ.—சூத்திரம்.)

சீர்செல வழுங்கல் செழுமட லூர்த
றூதிடை யாட றுயரவற் குரைத்தல்
கண்டுகை சோர்தல் பருவ மயங்க
லாண்பாற் கிளவி பெண்பாற்கிளவி
தேங்கமழ் கூந்தற் றெரிவை வெறியாட்
டரிவைக் கவடுணை பாண்வர வுரைத்தல்

பரிபுரச் சீறடிப் பரத்தை கூறல்
விறலி கேட்பத் தோழி கூறல்
வெள்வளை விறலி தோழிக்கு விளம்பல்
பரத்தை வாயில் பாங்கிகண் டுரைத்தல்
பிறர்மனைத் துயின்றமை விறலி கூறல்
குற்றிசை யேனைக் குறுங்கலி யுளப்பட
வொத்த பண்பி னொன்றுதலை யிட்ட
வீரெண் கிளவியும் பெருந்திணைப் பால.

என்-னின், இதுவும் பெருந்திணைப்பாலவாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள். செலவழுங்கல் முதலாகக் குறுங்கலியீறுகச் சொல்லப்பட்ட தினேழும் பெருந்திணைப்பாலவாம். எ - று.

அவற்றுள்,

௩௨௫.—செலவழுங்கல் :—

நிலவுவே னெடுந்தகை நீள்கழை யாற்றிடைச்
செலவுமுன் வலித்துச் செலவழுங் கின்று.

இ - ள். நிலவுபோல ஒளிவிடும் வேலினையும் பெரிய மேம்பாட்டினையு முடையவன் உயர்ந்த மூங்கிலியைந்த வழியிடைப் போவானாக முன்னே நிச்சயித்துப் போக்கு ஒழிந்தது. எ - று.

வ - று. *நடுங்கி நறுநுதலா ணன்னலம்பீர் பூப்ப
வொடுங்கி யுயங்க லொழியக் - கடுங்கணை
வில்லே ருழவர் விடரோங்கு மாமலைச்
செல்லேல் மொழிக செலவு.

இ - ள். நடுக்கமுற்று, மணங்கமழும் நுதலினையுடையாள் மிக்கஅழகு பீர்க்கம்பூப்போலப் பசப்ப மெலிந்து வருந்துதல்தவிரக் கொடிய அம்பினையுடையவில்லை ஏருழவாகவுடையவேடர்தம் முழைஞ்யுடைய உயர்ந்தபெரிய மலையிடத்துப் போகாம் ; நெஞ்சே, தவிர்வாயாக, போக்கை. எ - று. (௧)

௩௨௬.—மடலூர்தல் :—

ஒன்றல்ல பலபாடி
மன்றிடை மடலூர்ந்தன்று.

இ - ள். ஒன்றன்றியே பலவற்றையும்சொல்லி மன்றின்நடுவே மடன் மாவைச் செலுத்தியது. எ - று.

வ - று. இன்றிப் படரோடி யானுழப்ப வைங்கணையான்
வென்றிப் பதாகை யெடுத்தானு - மன்றிற்
றனிமடமா ஞேக்கி தகைநலம்பா ராட்டிக்
குனிமடன்மாப் பண்ணிமேல் கொண்டு.

---

* தொல். அகத். சூ. 54 - இளம். மேற்.

இ - ள். இற்றைநாள் இரதியைவுடனே யானைபழக ஐந்தம்பினையுடைய காமன் வெற்றிக்கொடியை உயர்த்தானை ; அம்பலத்திலே ஒப்பில்லாத மடப்பத்தினையுடைய மானன்ன பார்வையாள்தன் மிகக அழகைக் கொண்டாடி வளர்ந்த பனைமடலாலாகிய குதிரையைப்பண்ணி அதன்மேல் ஏறி. எ - று.

ஏறி இன்றிட்படோம் யா ழுபட ங்கக யா வென்றிப்பதாகை எடுத்தானும். (உ)

௩உஎ.—தூதிடையாடல.—

ஊழி மாலை யுறுதுயர் நோக்கிக்
தோழி நீங்கா நீதிலை [1]யாடின்று.

இ - ள. உகம்போன்ற மா ககால ழ த யுற்ற துன்பத்தைப்பார்த்துத் தோழி விட்டுநீங்காமல் த ட வ டதே தானிட்டது. எ - று.

வ - று. வள்வாய்ந்து பண்ணுற நன் ட ர் வடி கண்ணுற
வொள்வாள்போன் மா ய பவெனங் - கள்வாய
தாதுதொடு வண்டிற்குந் தா வ ரமாப
தூதொடு வந்தன் றெறு.

இ - ள. வாடை ஆராயந்து ய, தூவணியதேரினை ; வடுப்பிளவன்ன விழியினையுடையாள் ஓ வா போலும் கொடிய மாலைக்காலத்துப் பிழைத்தலவேண்டும், தை இடைதிலேயுடைய புவடனே சுரும்புஆர்க்கும் மாலையினையுடைய மலபோலுமாடனே, நின்னை வணங்கத் தூதாகிவந்தேன். எ - று. (௩)

௩உஅ.—துயரவறுத்துரைத்தல :—

மான்ற மாலை மயிலியல வருத்த
மேன்றக கூறித் துய வுற குரைத்தன்று.

இ - ள. மயங்கிய மாலைக்காலம் மயிலைப்போன்ற இயலினையுடைய தலைவியை வருத்தலை அறிபசொலலி அவள் துன்பத்தைத் தோழி தலைவற்குச்சொல்லியது. எ - று.

வ - று. உள்ளத் தவலம் பெருக வொளிவேலோ
யெள்ளத் துணிந்த விருண்மாலை - வெள்ளத்துள்
தண்டா ரகலந் தழூஉப்புணையா நீநல்கி
னுண்டாமென் றோழிக் குயிர்.

இ - ள். நெஞ்சிற ப்யரமிகச் சோதிவேலோய இகழ்தற்குநிச்சயித்த இருளினையுடைய மாலைவெ ளத்திலே குளிர்ந்த மாலைமார்பத்தைத் தழுவுதற்குத் தெப்பமாக நீ அளிப்பாயாகில் எனதுதோழிக்கு உயிருண்டாம். எ - று.

---

(பி - ம்.) 1 'ஆகின்று'

ருஉசு.—கண்டுகைசோர்தல் :—.

போதார் கூந்தற் பொலந்தொடி யரிவை
காதல் கைம்மிகக் கண்டுகை சோர்ந்தன்று.

இ - ள். மலர்நிறைந்த குழலினையும் பொற்றொடியினையுமுடைய தலைவி தன் அன்பு கைகடப்பத் தோழிகண்டு தன்னுடைய ஒழுக்கம் தளர்ந்தது. எ - று.

வ - று. ஆம்ப லுடங்கு மணிவளையு மேகின
கூம்பன் மறந்த கொழுங்கயற்கண் - காம்பி
னெழில்வாய்ந்த தோளி யெவனாங்கொல் கானற்
பொழிலெல்லா மீயும் புலம்பு.

இ - ள். ஆம்பற்றண்டை வளைத்திட்ட அழகியவளையும் வீழ்ந்தன; துயிலிழந்தன, வளவிய கயல்போலும்விழிகள்; மூங்கிலினும் அழகுமருவின தோளினையுடையாள் என்னாங்கொல்லோ! கடற்கரைச்சோலைமுழுதுந்தரும், தனிமையை. எ - று.

ஆம்பற்றண்டுபோலும் திரண்டவளையென்பாரும், இதழ்போலும் வெள்வளை யென்பாருமுளர். (ரு)

ருருo.—பருவமயங்கல் :—

உருவ வால்வளை யுயங்கத் தோழி
பருவ மயங்கிப் படருழந் தன்று.

இ - ள். அழகிய வெள்வளையினையுடையாள்வருந்தப் பாங்கி காலத்தை அன்றுமெனமருண்டு வருத்தமுற்றது. எ - று.

வ - று. பெரும்பணை மென்றோள் பிரிந்தாரெம் முள்ளி
வரும்பருவ மன்றுகொ லாங்கொல், - சுரும்பிமிரும்
பூமலி கொன்றை புறவெலாம் பொன்மலரு
மாமயிலு மாலு மலை.

இ - ள். பெரிய மூங்கில்போன்ற மெல்லியதோளினை நீங்கியதலைவர் எம்மை நினைந்து வருங்காலம் அல்லகொல்லோ? ஆங்கொல்லோ? வண்டொலிக்கும் பூ மிக்க கொன்றை குறுங்காடெல்லாம் பொன்னைப்பூக்கும்; அழகியமஞ்ஞையும் மலையிடத்தே ஆலியாநிற்கும். எ - று.

இது தோழி ஆற்றுவிக்கும்வகையன்றுதலிற் பெருந்திணையாயிற்று. (சா)

ருருக.—இ து வு ம து :—

ஆங்கவர் கூறிய பருவ மன்றெனத்
தேங்கமழ் கோதை தெளிதலு மதுவே.

இ - ள். அவ்விடத்துத் தலைவர்சொன்னகாலம் இஃது அன்றெனமணம் பொருந்தின மாலையினையுடைய தலைவி தேறுதலும் அத்துறையாம். எ - று.

வ - று. பொறிமயி லாலின பொங்க ரெழிலி
சிறுதுவலை சிந்தின சிந்த - நறிய
பவர்முல்லை தோன்றி பரியாம லீன்ற
வவர்வருங் காலமீ தன்று.

இ - ள். புள்ளிகளையுடைய மஞ்ஞை ஆலித்தன ; சோலையாகிய மேகம் பொறையாற்றாமையான் மதுச்சிறுதுளியைச்சிதறின ; சிதற, நறிய கொடி நெருக்கத் தான்மலிந்த முல்லையும் மென்றோன்றியும் காலமறியாமல் முகிழ்த்தன ; நம்முடைய தலைவர்வருங்காலம் இஃதன்று. எ - று. (எ)

## கககஉ.—ஆண்பாற்கிளவி :—

காமுறு காமந் தலைபரிந் தேங்கி
யேமுற் றிருந்த விறைவ னுரைத்தன்று.

இ - ள். வேட்கைமிகும் ஆசை எல்லைகடப்ப ஏக்கமுற்று மயங்கியிருந்த தலைவன்சொல்லியது. எ - று.

பரிந்தென்பதனைப் பரியவென்க.

வ - று. கயற்கூடு வாண்முகத்தாட் கண்ணிய நெஞ்ச
முயற்கூடு முன்னதாக் காணி - னுயற்கூடுங்
காணு மரபிற் கடும்பகலுங் கங்குலு
நாணுளு மேயா நகை.

இ - ள். கண்ணாகிய இணைக்கயல்பொருந்திய ஒளியாற்சிறந்த முகத்தினையுடையாளைக் கூடக்கருதியமனம் முயலிற்கு உறைவிடமாகிய மதியை முன்னே காணிற் பிழைத்தல்கூடும்; காணுதமுறைமையிற் கொடிய பகலும் இரவும் நாடோறும் நாடோறும் இயையா, மகிழ்ச்சி. எ - று.

நகை - பலநாளுமுடிகிமும் கூட்டங்கா. (அ)

## கககக.—பெண்பாற்கிளவி :—

வெள்வளை நெகிழவு மெம்முள் ளாத
கள்வனைக் காணுதிவ் வூரெனக் கிளந்தன்று.

இ - ள். சங்கவளை சோரவும் எம்மைநினையாது வெள்வளையினைக்கொண்ட கள்வனைக் காணுது இப்பதியென்று சொல்லியது. எ - று.

வ - று. வானத் தியலு மதியகத்து வைகலுங்
கானத் தியலு முயல்காணூர் - தானத்தி
னெள்வளை யோடவு முள்ளான் மறைந்துறையுங்
கள்வனைக் காணுதிவ் வூர்.

இ - ள். விண்ணில்நடக்கும் நிறைமதியித்து நாடோறும் காட்டிலே திரியுமுயலைக் காணுகிறதும்; கைப்பிடித்த ஒள்ளியவளைகழலவும் உணராளாகி ஒளித்து வாழுங்கள்வியைக் காணாது, இந்தப்பசி. எ - று.

இவையிரண்டும் கைக்கிளைக்காமத்த ; புறக்கூற்று இவர்க்கேயுரிய ; அல்லன யாவர்க்குமுரிய. (கூ)

நஙச.—வெறியாட்டு :—

தேங்கமழ் கோதை செம்மலளிகினைர்
தாங்கந் நிலைமை யாயறி யாமை
வேங்கையஞ் சிலம்பாற்கு வெறியா டின்று.

இ - ள். மணநாறுமாலையினையுடையாய், தலைவனது அருளைக்கருதி அவ்விடத்து அந்நிலைமையைத் தாயறியாமை வேங்கைமரத்தாற்பொலிந்த மலையுடைய முருகற்கு வெறிக்கூத்தாடியது. எ - று.

வ - று. *வெய்ய நெடிதுயிரா வெறடா னளிகினையா
வைய நனிநீங்க வாடினாள் - ஐய
லயன்மனைப் பெண்டிரோ டன்னைசொ லஞ்சி
வியன்மனையு ளாடும் வெறி.

இ - ள். வெவ்விதாக நிசுவாசம்விட்டுத் தலைவனது அருளைக் கருதித் தலைவன் வரவன்றோ வாராமையென்னும் ஐயப்பாடு மிகவும் நீங்க ஆடினாள், மயக்கத்தினையுடைய அயலிமனைமகளிருடனே அன்னைசொல்லையு மஞ்சி, அகன்றமனையிடத்தே ஆடும் வெறிக்கூத்தை. எ - று.

ஆடினார் யார் ? தலைவி. (கo)

நஙரு.—பாணன்வரவுரைத்தல் :—

மாணிழைக்கு வயலூரன
பாணன்வரவு பாங்கிமொழிந்தன்று.

இ - ள். மாண்ட ஆபரணத்தினை உடையாளுக்கு வயலூரன்றன் பாணன் வரவைத் தோழிசொல்லியது. எ - று.

வ - று. †அஞ்சொற் பெருப்பணைத்தோ ளாயிழையாய் தாரொடியும்
வஞ்சந் தெரியா மருண்மாலை - யெஞ்சேரிப்
பண்ணியல் யாழொடு பாணனார் வந்தாரா
லெண்ணிய தென்கொலோ வீங்கு.

இ - ள். அழகியசொல்லையும் பெரிய வேயன்னதோளினையும் தெரிந்த ஆபரணத்தினையுமுடையாய், தாஞ்சொல்லும் பொய்ம்மையை ஆராயமாட்டாத மயக்கஞ்செய்யும் மாலைப்பொழுதின்கண் எமதுசேரியிடத்து இசைக்கொத்தயாழுடனே பாணனார்வந்தார் ; இவர்கருதியகாரியம் என்னையோ ? இவ்விடத்து. எ - று. (கக)

* தொல். புறத். சூ. 5-இளம். மேற். † நன். சூ. 457-மயிலை. மேற்.

## ருருசு.—பரத்தைகூறல் :—

தேங்கமழ் சிலம்பன் றாமெமக் கெளிதெனப்
பாங்கவர் கேட்பப் பரத்தை மொழிந்தன்று.

இ - ள். மணங்கமழும் மலையையுடைய தலைவன் மாலைஎமக்குப் பெறுதற்கு எளிதென்றுசொல்லிப் பாங்காயினர் கேட்பப் பரத்தைமொழிந்தது. எ - று.

வ - று. பலவுரைத்துக் கூத்தாடிப் பல்வய லூர
னிலவுரைக்கும் பூணவர் சேரிச் - செலவுரைத்து
வெங்கட் களியால் விறலி விழாக்கொள்ள
லெங்கட் கவன்றா ரெளிது.

இ - ள். பலபொய்யும் சொல்லிநடித்துப் பலசெய்யினையுடையஊரன் நிலவைக்காட்டும் முத்தணியினையுடைய பரத்தையர்சேரியிடத்துப் போக்கைச் சொல்லி வெவ்விய மதுவையுண்டமகிழ்ச்சியாற் பாணிச்சி, விழாவினைக்கொண்டாடாதேகொள் ; எமக்கு அவனுடையமாலை எளிது. எ - று.

ஆதலால், விழாக்கொள்ளால். (கஉ)

## ருருஎ.—விறலிகேட்பத்தோழிகூறல் :—

பேணிய பிறர்முயக் காரமு தவற்கெனப்
பாணன் விறலிக்குப் பாங்கி மொழிந்தன்று.

இ - ள். விரும்பிய பரத்தையருடைய புல்லுதலைப்பெறுதல் அரிய அமிழ்தத்தோடொக்கும் தலைவற்கெனச்சொல்லிப் பாணனுடைய பாணிச்சிக்குத் தோழிசொல்லியது. எ - று.

வ - று. *அரும்பிற்கு முண்டோ வலரது நாற்றம்
பெருந்தோள் விறலி பிணங்கல் - சுரும்போ
டிரும் புனலூரற் காரமிர்த மன்றோ
முதிரு முலையார் முயக்கு.'

இ - ள். அரும்பிற்குமுண்டோ பூவினதுவாசம்? பெரியதோளினையுடைய பாணிச்சி, பிணங்காதேகொள் ; வண்டுடனே ஆர்க்கும் புனலையுடைய ஊரற்கு நிறைந்த அமிர்தமல்லவோ? முதிருமுலையினையுடையார் தழுவுதல். எ-று. (கந)

## ருருஅ.—விறலிதோழிக்குவிளம்பல் :—

ஆங்கவன் மூப்பவர்க் கருங்களி தருமெனப்
பாங்கி கேட்ப விறலி பகர்ந்தன்று.

இ - ள். அவ்விடத்துத் தலைவன்மூப்புப் பரத்தையர்க்குப் பெறுதற்கரிய மகிழ்ச்சியைத் தருமெனச்சொல்லி இற்பரத்தைதோழிகேட்பப் பாணிச்சி சொல்லியது. எ - று.

* தோல். அகத். சூ. 54 - இளம். ஷை ஷை ஷை 51 - ந. மேற்.

வ - று. *உளைத்தவர் கூறு முரையெல்லா நிற்க
முளைத்த முறுவலார்க் கெல்லாம் - விளைத்த
பழங்க ளனைத்தாய்ப் படுகளி செய்யு
முழங்கும் புனலூரன் யூப்பு.

இ - ள். வெறுத்தவர் கூறும்வார்த்தையெல்லாம் அங்ஙனேநிற்க, தோன்றின எயிற்றினையுடைய பரத்தையர்க்கும் ஆக்கினபழந்தேறலையொத்து மிக்ககளிப்பினைப்பண்ணும், ஒலிக்குநீரினையுடைய ஊரனதுமுதுமை. எ - று.

௩௩௯.—பரத்தைவாயில்பாங்கிகண்டுரைத்தல் :—

உம்மி லரிவை யுரைமொழி யொழிய
வெம்மில் வலவனுந் தேரும் வருமெனப்
பரத்தை வாயிற்குப் பாங்கி பகர்ந்தன்று.

இ - ள். உங்கள்வீட்டிடத்து மடவாள்சொன்னவார்த்தை நீங்க, எங்கள் அகத்திடத்துப் பாகனும் தேரும் வருமெனச்சொல்லி இப் பரத்தை தோழிக்குச் சேரிப்பரத்தைதோழி சொல்லியது. எ - று.

வ - று. மாணலங் கொள்ளு மகிழ்நன் றணக்குமேற்
பேணலம் பெண்மை யொழிகென்பார் - காணக்
கலவ மயிலன்ன காரிகையார் சேரி
வலவ னெடுந்தேர் வரும்.

இ - ள். 'மாட்சிமைப்பட்ட நமது அழகினைக் கைக்கொள்ளுந்தலைவன் எம்மைவிட்டு நீங்குவானாயின், விரும்பேம்; பெண்மைத்தன்மை எம்மிடத்து நீங்குக' என்றுசொல்லும் இப்பரத்தையர்காணத் தோகைமயிலினையொத்த பரத்தையர்தம் சேரிக்கண்பாகனையுடைய உயரியதேர் வாராநிற்கும். எ - று.

பேணலம் பெண்மையொழிகென்பார் காணவரும். (கரு)

௩௪௦.—பிறர்மனைத்துயின்றமைவிறலிகூறல் :—

மற்றவர் சேரியின் மைந்த னுறைந்தமை
யிற்றெண விறலி யெடுத்துரைத் தன்று.

இ - ள். பரத்தையர்சேரியிடத்துத் தலைவன் தங்கினபடி இத்தன்மைத்தெனப் பாணிச்சி எடுத்துச்சொல்லியது. எ - று.

வ - று. தண்டா ரணியவாந் தையலார் சேரியுள்
வண்டார் வயலூரன் வைகினமை - யுண்டா
லறியே னடியுறை யாயிழையாற் பெற்றேன்
சிறியேன் பெரிய சிறப்பு.

இ - ள். குளிர்ந்த மாலையினையுடைய அழகை ஆசைப்படும் பரத்தையர் சேரியிடத்திலே சுரும்புநிறைந்த கழனியையுடைய ஊரன்றங்கினமை நீ அருளினபடியால் உண்டு ; யான் அறியேன் ; அடிபொருந்தும் ஆபரணத்தினை யுடையாளாலே பெற்றேன், சிறியயான் பெரியநன்மையை. எ - று. (கசு)

---

* தொல். அகத். சூ. 54 - இளம்; ஷை ஷை ஷை 51 - ந. மேற்.

௩௪௧.—குற்றிசை :—

பொற்றா ரகலம் புல்லிய மகளிர்க்
கற்றாங் கொழுகா தறங்கண் மாறின்று.

இ - ள். அழகியமாலைமார்பைப் பொருந்திய அரிவையர்க்கு அற்றறுதிப் பட்டு நடவாது அறத்தைக் கண்மாறியது. எ - று.

வ - று. *கரிய பெருந்தடங்கண் வெள்வளைக்கை யாளை
மரிய கழிகேண்மை மைந்த - தெரியின்
விளிந்தாங் கொழியினும் விட்டகலார் தம்மைத்
தெளிந்தாரிற் றீர்வது தீது.

இ - ள். கரியவாய் மிகவும் பெரியவிழியினையும் வெள்ளாகத தொடியணிந்த கரத்தினையுமுடையாளைப் பொருந்திய மிக்க தொடர்ச்சியினையுடைய தலைவனே, ஆராயின், இறந்துபடினும் விட்டுநீங்காராய்த் தம்மைத் தஞ்சமென்று தேறினா ரிடத்துநின்றும் கழிவது பொல்லாது. எ - று. (௧௭)

௩௪௨.—குறுங்கலி :—

நாறிருங் கூந்தன் மகளிரை நயப்ப
வேறுபடு வேட்கை வீயக் கூறின்று.

இ - ள். நறுநாற்றமுடைய பெரியகுழலினையுடைய மடவாரைவிரும்ப விகற்பித்தகாதலைக் கெடச்சொல்லியது. எ - று.

வ - று. பண்ணவாந் தீஞ்சொற் பவளத் துவர்ச்செவ்வாய்ப்
பெண்ணவாம் பேரல்குற் பெய்வளை - கண்ணவா
நன்னலம் பீர்பூப்ப நல்கார் விடுவதோ
தொன்னல முண்டார் தொடர்பு.

இ - ள். பண் ஆசைப்படத் தித்தித்தசொல்லினையும் பவளம்போல மிகச்சிவந்த வாயினையும் பெண்மைத்தன்மை அவாவும் பெரிய அல்குலினையும் இட்டவளையினையுமுடையவள் தன் கண்கள் ஆசைப்படும் நல்லஅழகு பீர்க்கம் பூப்போலப் பசப்ப அருளாராய்க் கைவிடுவதோ, பழையதாகிய நலத்தை அனுபவித்தவர் உறவு. எ - று. (௧௮)

இருபாற்பெருந்திணை முற்றிற்று.

பெருந்திணைப்பாட்டு முப்பத்தேழும் முடிந்தன.

பன்னிரண்டாவது பெருந்திணைப்படலம் முற்றிற்று.

# ஒழிபு.

(௧௮.—சூத்திரம்.)

பாடாண் பகுதியுட் ²றொல்காப் பியமுதற் ¹
கோடா மரபிற் குணமொடு நிலைஇக்

---

* தொல். அகத். சூ. 54 - இளம். மேற்.

(பி - ம்.) 1 'பாடாண்பாட்டிலும் வாகையிலுமுள்ள புறத்தியல்', 'வென்றிபெருந்திணை' 2 'தொல்காப்பியன் முதல'

கொடுப்போ ரேத்திக் கொடாஅர்ப் பழித்தலும்
விடுத்த லறியா விறல்புரி வாகையுள்
வாணிக வென்றியு மல்ல வென்றியு
நீணெறி யுழவ னிலனுழு வென்றியு
மிகல்புரி யேறுகோள் கோழியு மெதிர்வன்
றகருடன் யானை தணப்பில்வெம் பூழொடு
சிவல்கிளி பூவை செழும்பரி தேர்யா
ழிவர்தரு சூதிடை யாடல் பாடல்
பிடியென் கின்ற பெரும்பெயர் வென்றியொ
டடையன பிறவு முளப்படத் தொகைஇ
மெய்யி னோர்தமிழ் வெண்பா மாலையு
ளைய னாரித னமர்ந்துரைத் தனவே.

என் - னின், பாடாண்பகுதியிலும் வாகையிலுமுள்ள புறத்திணையாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள். பாடாண்பகுதியுட் கொடுப்போரேத்திக் கொடாஅர்ப்பழித்தலும், வாகைத்திணையுள் வாணிகவென்றி மல்லவென்றி உழவன்வென்றி ஏறுகோள்வென்றி கோழிவென்றி தகர்வென்றி யானைவென்றி பூழ்வென்றி சிவல வென்றி கிளிவென்றி பூவைவென்றி குதிரைவென்றி தேர்வென்றி யாழ் வென்றி சூதுவென்றி ஆடல்வென்றி பாடலவென்றி பிடிவென்றி என இவை பதினெட்டுமாம். எ - று.

'அவற்றுள்,

௩௪௩.—கொடுப்போரேத்திக்கொடாஅர்ப்பழித்தல் :—

வ - று. சீர்மிகு நல்லிசை பாடிச் செலவயர்துங்
கார்முகி லன்னார் கடைநோக்கிப் - போர்மிகு
மண்கொண்ட வேன்மற மன்னரே யாயினும்
வெண்கொண்ட லன்னாரை விட்டு.

இ - ள். சீர்மிக்க நலலபுகழைப்பாடிச் செல்லவிரும்புவேம், காலமழை யன்னார் வாய்தலைக்கருதி ; பூசன்மிக்க பூமியெல்லாங் கைக்கொண்ட வேலினை யுடைய மறவேந்தரேயாயினும் பெய்யாமுகிலனையாரைவிட்டு. எ - று.

விட்டுக் கார்முகிலன்னார் கடை நோக்கிச் செலவயர்தும். (க)

௩௪௪.—வாணிகவென்றி :—

வ - று. காடுங் கடுந்திரை நீர்ச்சுழியுங் கண்ணஞ்சான்
சாடுங் கலனும் பலவியக்கி - நீடும்
பலிசையாற் பண்டம் பகர்வான் பரியான்
கலிகையா னீக்கல் கடன்.

இ - ள். காட்டையும் கடியதிரையினையுடைய நீர்ச்சுழியையும் கண ணஞ்சானாய்ச் சகடம்பலவும் மரக்கலம்பலவும் இடந்தோறுஞ்செலுத்தி நீடும்

இலாபங் காரணமாகப் பலபண்டமும் விற்கும்வாணிகன் பொருளிற்பற்றில னுய்ப பிறர்மிடியைத் தன்கையாலேநீக்குமது, செய்தி. எ - று. (௨)

௧௪௫.—மலைவென்றி :—

வ - று. கண்டான் மலைக்கான் கதிரோனை நாட்டியே
கொண்டான் மதுகைக் குறமலையன் - வண்டார்க்கு
மாலை துயலு மருவிய மாமலை
போலுந் திறம்பினான் புடைத்து.

இ - ள். எதிரிமலை கண்டான், மீட்டான், ஒளியான்மிக்க ஆகாயத்திடத்தே அவ்வெழுவிசைக் கதிரவனைத் தாமந்தைதைக்கொண்டான், வெற்றிக்கொடியினையுடைய மறமன்னன்; வண்டு மாலிகளும் மாமையுமசையும் அருவியினையுடைய பெரியமலையையொக்கும் திரண்டதோளின் புத்தடி. எ - று.

புடைத்துக்கொண்டான்.

தட்டுகை - உடசகரிக்கை. (௩)

௧௪௬.—உழவன்வென்றி :—

வ - று. மண்பத நோக்கி மலிவயலும் புன்செய்யுங்
கண்படா வேர்பூட்டிக் காலத்தா - லெண்பதனுந்
தத்துநீ ரார்கதிர் கடல்வேலித் தாயர்போல்
வித்தித் தருவான் விளைவு.

இ - ள். நிலத்தின்செவ்வியைப்பார்த்து மிக்க வயலிடத்தும் கொல்லையிடத்தும் பரக்க ஏரைப்பூட்டியுழுது பருவகாலத்தால் நெல்லுவரகு முதலாயின எண்பதின்வகையும் தவழுந் திரைமையாற்கரும் கடல் வேலியாகவுடைய பூமியிடத்துத் தாயரைப்போல வித்தி விளைப்பான், பல்லுயிர்க்கும் ஆக்கம். எ-று.

எண்பதனுவன :—நெல் வரகு சாமை தினை இறுங்கு கேழ்வரகு கொள் உழுந்து என்பன; "நெல்வரகு சாமை தினை யிறுங்கு கேழ்வரகு - கொள்ளுழுந்தோ டெண்விளைவா கும்" (௪)

௧௪௭.—ஏறுகோள்வென்றி :—

வ - று. குடைவரை யேந்தியநங் கோவலனைக் கொண்டா
னடையவிழ் பூங்கோதை யஞ்சல - விடையரவ
மன்றங் கறங்க மயங்கப் பறைபடுத்
தின்று நமர்விட்ட வேறு.

இ - ள். மலையாகிய குடையையேந்திய நம்ஆயனைக்கொண்டான். இலை மலரும் பூமாலையினையுடையாய், அஞ்சாதேகொள்; மிக்க ஆரவாரம் மன்றிடத்தே யொலிப்பக் கண்டாரமயங்கப் பறையறைந்து இன்று நம்உறவுமுறையார்விட்ட ஏற்றை. எ - று. (௫)

௨௪௮.—கோழிவென்றி :—

வ - று. பாய்ந்து மெறிந்தும் படிந்துங் பல்காலுங்
காய்ந்தும்வாய்க் கொண்டுங் [1]கடுஞ்சேவ - லாய்ந்து
[2]நிறங்கண்டு வித்தகர் நேர்விட்ட கோழிப்
புறங்கண்டுந் தான்வருமே போர்க்கு.

இ - ள். எழப்பாய்ந்தும் காலின்முள்ளாலெயிட்டடித்தும் தாழ்ந்தும் பலகாலுங் கோவித்தும் [3]கூடியும், கடியசேவற்கோழி, ஆராய்ந்து கோழிகளின் நிறமறிந்து கோழிநூல்வல்லவர் சொல்லுக்குச்சொல் ஒப்பாகவிட்ட கோழியைப் புறங்கண்டும் தான் பின்பும் போர்க்குவாராநின்றது. எ - று.

புறங்கண்டும் போர்க்குவரும்.

சொல்லுக்குச்சொல் வெல்லும், ஆமைக்கு ஆமைவெல்லும், தெங்குக்குத் தெங்குவெல்லும் எனக் கோழிகளின் [4]நிறமறிந்துவிடுதல். வித்தகர் - கோழி நூல்வல்லவர். (௬)

௨௪௯.—தகர்வென்றி :—

வ - று. அருகோடி நீங்கா தணைதலு மின்றித்
திரிகோட்ட மாவிரியச் சீறிப் - பொருகளம்
புக்கு மயங்கப் பொருது புறவாயை
நக்குமா நல்ல தகர்.

இ - ள். சேர ஓடிமீளாதே மிகக்கிட்டுதலுமின்றிப் புரிந்த கொம்பினையுடைய எதிர்த்த தகர்கெடக் கோபித்துப் போர்க்களத்தேபுக்குக் கலங்கப் பொருது புறவாயினைநக்கும், நல்லதகர். எ - று. (௭)

௨௫௦.—யானைவென்றி :—

வ - று. கஞ்சுகம் வாய்த்த கவளந்தன் கைக்கொண்ட
குஞ்சரம் வென்ற கொலைவேழந் - துஞ்சா
துழலையும் பாய்ந்திறுத் தோடாது தான்ற
னிழலையுந் தான்சுளிக்கு நின்று.

இ - ள். அட்டிமதுரமிட்டுத் திரட்டின கவளத்தைத் தன்கையிலே கொண்ட யானையைவென்ற கொலைத்தொழிலையுடையவேழம், உறங்காதே கணையத்தையும் பாய்ந்து முறித்து ஓடாதே தான் தன்னுடைய நிழலையும் வெகுண்டுநின்று நகைக்கும். எ - று.

உம்மை, சிறப்பு. (௮)

௨௫௧.—பூழ்வென்றி :—

வ - று. சொல்லுஞ் சுவட்டவர் சொல்லுக சொல்லுங்காற்
சொல்லும் பலவுள சொன்னபின் - வெல்லு

---

(பி - ம்.) 1 'கடுஞ்சொல்லாராய்ந்து' 2 'நிறங்காண்டு' 3 'கூடியுங் கடிய சொற்கோழி' 4 'திறமறிந்து'

நலம்வர நாடி நடுங்காது நூற்கட்
புலவரா லாய்ந்தமைத்த யாழ்.

இ - ள். நூற்பழக்கமின்றியே சொல்லுங் குற்றப்பூழாடிகள் வேண்டிற் றுச்சொல்லுவ, சொல்லுமிடத்துச் சொல்லக்கடவ மந்திரமுள, அவற்றைச் சொன்னபின், வென்றிபெறற் கேற்றமையுண்டாக ஆராய்ந்து கலங்காது நூலிடத்து அறிவுடையாரால் இலக்கணம் ஆராய்ந்து மதித்த யாழ். எ - று.

சொல்லக்கடவமந்திரம் பலவாவன: நீர்வார்த்தருசி ஓதுமந்திரமும், பச்சிலை பிசைந்து தடவும்போது சொல்லுமந்திரமும், செவியுள் ஒதுமந்திரமும். (கூ)

கருஉ. சிவலவென்றி:—

வ - று. ஓட்டியா ரெல்லா முணரார் புடைத்தபின்
விட்டோட வேண்டுமோ கண்ணுண்மை - விட்ட
சுவட்டிற்கு மாயிற் சுடரிழாய் சோர்ந்து
கவட்டிற்க வோடுங் களத்து.

இ - ள். சபதங்கூறும் சிவலினையுடையாரெல்லாம் அறியார்; எதிர்ச்சிவலைத் தாக்கியபின்பு தன்னுண்மையைக் கைவிட்டோடவேண்டுமோ, இந்தச் சிவல் வந்தபொழுதே இதற்குக்கருசி யுடைமையும்; இவர் பொரவிட்டவற்றுள் ஏன்றொன்று எதிர்க்குமாயின், விடுவிளங்கும் ஆபரணத்தினையுடையாய், வருந்தி இதன்கவட்டினுட்புகுந்து கண்டோர் நகைக்க ஓடுங் களத்திடத்து. எ - று.

ஆதலால் விட்டோடவேண்டுமோ கண்ணுண்மை. (கo)

கருக.—கிளிவென்றி :—

வ - று. இலநா முரைப்பதென்க மெல்வளை நாணப்
பலநாள் பணிபதமுங் கூறிச் - சிலநாளுட்
பொங்கரி யுண்கணாள் பூவைக்கு மாறுகப
பைங்கிளியைக் கற்பித்தாள் பாட்டு.

இ - ள். நாம் அதனைக்குறித்து இகழ்ந்துசொல்லுஞ்சொல்இல; விளங்கும் வளையினையுடையாய், நீநாணப் பலநாளும் தாழ்ந்தசொற்களையுங் கூறிச் சில நாளுள்ளே மிக்க செவ்வரியினையுடைய மையுண்டகண்ணாள் நம்பூவைக்கு மாறுபடத் தன்பசுங்கிளியைப் பாட்டைக்கற்பித்தாள். எ - று.

நாமுரைப்புஇல. (கக)

கருச.—பூவைவென்றி:—

வ - று. புரிவொடு நாவிழுற்ற பூவை புணர்த்துப்
பெரிய வரியவை பேசுந் - தெரிவளை
வெள்ளொயிற்றுச் செவ்வாய் வரியுண்க ணாள்வளர்த்த
கிள்ளை கிளந்தவைகீண் டிட்டு.

* பட். 59 - 77. ந.

இ - ள். பெரியசதோடு நாவினாலே பாவையானது வருந்துப் பெரியவான சொல்லுதற்கரியவார்த்தைகளைச் சொல்லும் ; தெரிந்தவளையினையும் விளர்த்த எயிற்றினையும் சிவந்த வாயினையும் செவ்வரிகருவரியாற்சிறந்த மையுண்ட கண்ணினையுமுடையாள் தானெவ்வாறு சிரிசொன்னவார்த்தைகளைக் கிழித்துக் கீழ்ப்படுத்தி. எ - று.

கீண்டிட்டுப்பேசும். (௧௨)

௩௫௫. —குதிரைவென்றி —

வ - று. ஐந்து கதியும் பதினெட்டுச் சாரியையுங்
சுந்து மறமுங் கறங்குளமா - முந்துற
மேலகொண் டவைசெலீஇ வென்வேலான் மேம்பட் [டான்
வேலகொண் டசன்றுளை மீட்டு.

இ - ள். விக்கிதம் வாகிதம் உபகண்டம் தவம் மாஜவம் என்னுமிப் பஞ்சதாரையையும் பதினெட்டுவகைப்பட்ட சாரிவ வினையும் கழியப்பாய் தலையும் கறுவுதலையும் ஒலிக்குந்தயாட்டத்தையுமுடைய குதிரையை முந்துற மேல்கொண்டு முன்பு சொன்னவைகளைச்செலுத்தி வெற்றிவேலைக் கொண்டு மேம்பட்டான், பிறரை வென்று வெற்றிமகளைத் தன்னிடத்துமீட்டுக் கொண்டு. எ - று. (௧௩)

௩௫௬. —தேர்வென்றி. —

வ - று. ஒலிமணித் திண்டேர் ருடையாரை வெல்லுங்
கலிமணித் திண்டேரான் காளை - கலிமாப்
பலவுடன் பூட்டிப் படர்சிறந் தைந்து
செலவொடு மண்டிலஞ் சென்று

இ - ள். ஒலிக்கும் மணியையுடைய திண்ணிய தேரினையுடைய பகைவரை வெல்லும், ஆரவாரிக்கும் மணிகளையுடைய திண்ணிய தேரோலே காளையானவன் ; மனவெழுச்சியையுடைய குதிரைபலவும் ஒக்கப்பூட்டிச் செல்லுதல் மிக்க பஞ்சதாரையுடனே பதினெட்டுச் சாரியையும் அமாந்து. எ - று.

சென்று வெல்லும். (௧௪)

௩௫௭. —யாழ்வென்றி. —

வ - று. பாலை படுமலை பண்ணி யதன்கூட்டங்
கோலஞ்செய் சீறியாழ் கொண்டபின் - வேலைச்
சுவையெலாந் தோன்ற வெழீஇயினாள் சூழ்ந்த
வவையெலா மாக்கி யணங்கு.

இ - ள். படுமலைப்பாலையையும் அல்லதபாலைகளையும் ஆக்கி அழகு செய்த சிறியயாழைத் தன்கையிலேகொண்டபின்பு முன்புசொன்ன திரிபாலைத்திறமெல்லாம் அமுதச்சுவைதோன்ற வாசித்தாள், சுற்றிய அவையினுள்ளாரையெல்லாம் தன்வசத்தாராக்கி, அணங்கு. எ - று.

அணங்கு எழீஇயினாள். (௧௫)

௫௫௮.—சூதுவென்றி :—

வ - று. *கழகத் தியலுங் கவற்றி னிலையு
மழகத் திருநுதலா ளாய்ந்து - புழகத்து
பாய வகையாற் பணிதம் பலவென்று
ளாய வகையு மறிந்து.

இ - ள். சூதினியல்பையும் கவற்றினுடைய நிலையையும் பனிச்சையையுடைய திருநுதலினையுடையாள் ஆராய்ந்து புகழினையுடைய மனையிடத்து உபாயவகையால் சூதுபொரவொட்டினபலவும் வென்றாள், ஆதாயத்தின் கூறுபாட்டையுமறிந்து. எ - று.

அறிந்து பலவென்றாள்.

புகழென்பதன்கண் ககரம் விகாரத்தாற்றொக்கது. (௧௬)

௫௫௯.—ஆடல்வென்றி :—

வ - று. *கைகால் புருவங்கண் பாணி நடைதூக்குக்
கொய்பூங்கொம் பன்னாள் குறிக்கொண்டு - பெய்பூப்
படுகளிவண் டார்ப்பப் பயில்வளைநின் றாடுந்
தொடுகழன் மன்னன் றுடி.

இ - ள். கையாலும், காலாலும், புருவத்தாலும், கண்ணாலும் தாளத்தையும் செலவையும் இசையையும் கொய்யப்பட்ட பூங்கொம்பன்னாள் கருதிக்கொண்டு சூடியபூவில் மிக்க களிப்பினையுடைய வண்டு ஆரவாரிப்பச் செறிந்த வளையினையுடையாள் நின்று ஆடும், கட்டுங்கழல்வேந்தனுக்குத் துடிக்கூத்தை. எ - று. (௧௭)

௫௬௦.—பாடல்வென்றி :—

வ - று. *வண்டுறையுங் கூந்தல் வடிக்கண்ணாள் பாடினாள்
வெண்டுறையுஞ் செந்துறையும் வேற்றுமையாக் - கண்டறியக்
கின்னரம் போலக் கிளையமைந்த தீந்தொடையா
ழந்நரம்பு மச்சுவையு மாய்ந்து.

இ - ள். வண்டுதங்கும் கூந்தலினையும் மாவடுவகிர்போன்ற கண்ணினையுமுடையாள் பாடினாள்; வெண்டுறைப்பாட்டும் செந்துறைப்பாட்டும் வேறுபாடு தோன்ற, அறிவர் மனத்தாற் கண்டறியக் கின்னரத்தின் ஓசைபோல இணை கிளை பகை நட்பு இனமென்னும் வகையின் ஐந்தாவதாகிய கிளைத்தொடர்ச்சியமைந்த தித்தித்த கோவையினையுடைய யாழிற்செய்யப்பட்ட அழகிய [1]நரம்பும் மந்தர மத்திம தாரமும் ஆராய்ந்து. எ - று.

ஆய்ந்து பாடினாள்.

செந்துறையென்பது ஓசைகுறித் * * * * (௧௮)

---

* தொல். புறத். சூ. 16 - இளம்; ஷை ஷை ஷை 20 - ந. மேற்.

(பி - ம்.) 1 ‘நரம்புமந்தாசமுமத்திமதாரகமு மாராய்ந்து’

ஈசுக.—பிடிவென்றி :—

வ-று. குவளை நெடுந்தடங்கட் கூரெயிற்றுச் செவ்வா
யவளொடு மாமையொப் பான - விவளொடு
பாணியுந் தூக்கு நடையும் பெயராமைப்
பேணிப் பெயர்ந்தாள் பிடி.

இ-ள். செங்கழுநீர்மலரையொத்த நெடிய பெரியகண்ணினையும் கூரிய எயிற்றினையும் சிவந்த வாயினையுமுடைய தேவியுடன் நிறமொத்த இவளோடு தாளமும் இசையும் செவ்வியும் தப்பாதபடி பரிசரித்துப் பிடிபோல அசைந்துபெயர்ந்து ஆடுங்கூத்தினை ஆடினாள். எ-று.

இனிப் பெயர்த்தாளொ ... மாதிர ... பிடியைக் கூத்திற்கமைத்தாரு முளர். (௪௪)

ஒழிபு முற்றும்

ஆகப்பாட்டு ௩௬௧.

(கசு.—சூத்திரம்) :—



வெட்சி கரந்தை வஞ்சி காஞ்சி
யுட்குடை யுழிஞை நொச்சி தும்பையென்
றித்திற மேழும் புறமென மொழிப
வாகை பாடாண் பொதுவியற் றிணையெனப்
போகிய மூன்றும் புறப்புற மாகும்.

ஐயனாரிதனார்பாடிய புறப்பொருள் வெண்பாமாலை
மூலமும் உரையும் முற்றுப்பெற்றன.*




* பரிசோதனைக்குக்கிடைத்த ஏட்டுப்பிரதிகளுள் ஒன்றில், "சீயர் திருவடிகளே சரணம்; வைத்தியநாத குருவே சரணம்: பெரிய திருவடி குருவே சரணம். அளஎ-ம்ஹூ மார்கழிமீ சதுர்த்தசியும் புதன்கிழமையும் உரோகிணியும் பெற்ற சுபதினத்திலே இரத்தினகவிராசர் வெண்பாமாலையுரை எழுதி முற்றும்" என்பது வரையப்பெற்றிருந்தது.

# சூத்திர அகராதி.

[எண் - பக்கஎண்.]



# துறையகராதி.

[இதில் திணைப்பெயர்களும் சிலவுண்டு.]

புறப்பொருள் வெண்பாமாலையிலுள்ள

# அரும்பதமுதலியவற்றின் அகராதி.

[எண் - பக்கஎண்.]

ஆவதுகொல் - ஆவதுபோலும், 35.
ஆவியென்பது ஆவியைக் குறிக்கிற்றல், 86.
ஆழி - தேர்க்கால், 65.
ஆழித்தேர் - வட்டக்காலாற் சிறந்த தேர், 21.
ஆர் - வீரம், 69; வீரர், 15, 17, 18.
ஆள்வினை - முயற்சி, 100.
ஆளமர்வெள்ளம், 17.
ஆளி - சிங்கம், 11.
ஆற்றல் - வலி, 89. [123.
ஆற்றார் - பொறாதவர், 14; வறியவர்,
ஆற்றான் - பொறான், 143.
ஆற்றின் - நெறியானே, 123.
ஆற்றுப்படுத்தல் - வழிப்படுத்தல், 100.
ஆற்றேன் - பொறேன், 140. [101.
ஆறிய - தணிந்த, 23.
ஆறு - கட்புமுதலிய ஆறு; படைமுதலிய ஆறு, 101; வழி, 148.
ஆறுதல் - ஒழிதல், 24.
ஆன் தொறுப்பொருளில்வருதல், 11.
ஆனந்தக்குற்றம், 109.
ஆறா - அமையாத, 36, 114.
ஆறாது - அமையாது, 84, 142.
இகல் - மாறுபாடு, 3, 56, 63, 73, 95, 98, 112; வலி, 37.
இகலின் - மாறுபாடின், 62.
இங்குலிகம் - சாதிலிங்கம், 15.
இசை - புகழ், 81.
இஞ்சி - மதில், 54.
இட்டற்று - இட்டதன்மைத்து, 3.
இட்டு மூன்றாம்வேற்றுமைப் பொருளில்வருதல், 34, 39, 57.
இட்டுக்கொடுத்தல் - ஏற்றிக்கொடுத்தல், 10. [லல், 35.
இட்டுரைத்தல் - சிறப்பித்துச் சொல்
இடங்கணிப்பொறி - மதிலின்மேலுள்ள ஒருவகைப்பொறி, 54.
இடங்கழிமால் இராகவேகத்தையுண்டாக்கும் மயக்கம், 141.
இடந்த - பிளந்த, 39.
இடந்து - பெயர்த்து, 52.
இடபம், 20.
இடம்படுதல் - அகலுதல், 124.
இடர் - மிடி, 87; வருத்தம், 137;
இடரெட்டு, 96. [வறுமை, 75.
இடவமுழைமைதி, 64. [சம், 94.
இடிமுரசம் - இடிபோல்முழங்கு முர
இடுதல் - பண்ணுதல், 54.
இடைக்குறை, 52.
இடை - இடையீடு, 128.
இடைமணி - செறிந்தமணி, 163.
இடையாடின்று - நடந்தது, 149.
இணர்-கொத்து, 112, 131; தொத்து, 144. [126.
இணைந்த - தம்மில் இணையொத்த,
இணைவிளக்கையுடைய தெய்வமகளிர், [45.
இதழ் - இமை, 131.
இதழி - கொன்றை, 105.
இந்திரதனு - வானவில், 101.
இந்திரன், 97.
இமிழ்தல் - ஆர்த்தல், 9. [தல், 66.
இமைத்தல் - விளங்கல், 74; விழித்
இமையோர் - தேவர், 106.
இயக்கல் - நடத்தல், 88.
இயக்கி - செலுத்தி, 156.
இயக்கு - போக்கு (போதல்), 69.
இயங்கரணம் - திரிபுரம், 50.
இயங்காவிருள் - ஒருவரும் நடக்கத் தகாத இருள், 108.
இயம் - வாத்தியம், 14.
இயம்புதல் - ஒலித்தல், 27, 56.
இயமன் உயிர்களைக் கைக்கொள்ளுதல், 63. [வன், 36.
இயமன் கொலையில் ஆராமையுடைய
இயமன்வாயிலேபோன உயிரை மீட்டல், 73.
இயமனைப்போலக் கோபித்தல், 14.
இயல் - தன்மை, 50.
இயல்பு - பண்பு, 39.
இயலுதல் - நடத்தல், 131, 151.
இயவர் - வாச்சியக்காரர், 29.
இயன்மொழிவாழ்த்து, 91.
இயைந்து - கூடி, 116.
இர - இரா, 125.
இரக்கம் - விதனம், 133.
இரங்கல் - அதிர்தல், 24; நெகிழ்தல், முழங்கல், 21; வருந்துதல், 117.

கல்லருவி - மலையருவி, 132.
கல்லாம்தவர் - இயற்கையான மறத்திணையுடையார், 33. [125.
கல்லென - அநுகரண சத்தமுண்டாக,
கல்வியை உடம்பைப்போலப் பாதுகாக்கவேண்டும், 82. [தல், 99.
கலங்குதல் - குலைதல், 48; துளங்கு
கலந்தவன் - கூடினகொழுநன், 118.
கலம் - மரக்கலம், 156
கலவம் - தோகை, 154.
கலவா - பொருந்தாத, 111.
கலவார் - பகைவர், 4.
கலவேம் - மணவேம், 142.
கலன் - மரக்கலம், 156.
கலாவும் - கலக்கும், 32.
கலி - ஆரவாரிப்பு, மனவெழுச்சி,
கலுழ்ந்த, 71. [160; மிடி, 156.
கலுழும் - அழாநிற்கும், 4. [63.
கலை - கலைமான், 11; குதிரைக்கலணை,
கலைமகள், 109.
கலைமான், 11, 127.
கவ்வை - ஆரவாரம், 131, 143.
கவடி - பலகறை, 57.
கவடு, 159.
கவந்தம் - தலையில்லா உடம்பு, 16.
கவர்த்த தலையையுடைய அம்பு, 9.
கவர்தல் - கொள்ளைகொள்ளல், 9, 15.
கவலைமருது - கவர்த்தமருது, 80.
கவலையாற்கையைக்கன்னத்தில் வைத்
கவற்ற - வருத்த, 9. [தல், 8.
கவறு - சூதாடுங்கருவி, 160, 161.
கவிகை - தியாகம், 101.
கவின்பெற - அழகுபெற, 115.
கவைஇ - தழுவிக்கொண்டு, 126.
கழகம் - சூது, 160, 161.
கழல் - வீரக்கழல், 4; கால், 22.
கழி - மிக்க, 28.
கழிகாதல், 122.
கழிதல் - இறத்தல், 118, 122.
கழியப்பாய்தல், 160. [வாங்காமே, 92.
கழியாமே - (வாளை) உறையினின்றும்
கழுது - பேய், 62, 125.
கழுதையோர், 57.
கழுமிய - பொருந்திய, 67, 127.
கழுமினார் - கெழுமினார், 72.
கழை - மூங்கில், 5.
கள் - தேறல், 154; தேன், 5.
கள்மகிழ்ந்து - மதுவையருந்தி, 20.
கள்விற்பாள், 97.
கள்ளவிழ்தார் - தேனொழுகுமாலை, 135.
கடங்கொள்ளுதல், 35, 54.
களபம் - யானைக்கன்று, 100.
களம் - இடம், 92.
களமர் - அடியார், 26.
களரி - யுத்தகளம், 15, 65, 83, 91.
களவழி, 75.
களவேள்வி, 58, 76.
களி - மதம், 91, 140.
களிறு - யானை, 14.
கற்சிறை - கல்லாற்கட்டினகரை, 27.
கற்புடைமை - ஒருமையுடைமை, 41.
கற்பொறி, 54.
கறங்கல் - ஒலித்தல், 23, 114.
கறவை - பசுநிரை, 90.
கறுவுறுமுனிவு, 144.
கன்மேற்றிரிபங்கள், 87.
கன்னலின்றிண்டோள், 85.
கன்னவிற்றிண்டோளான், 134.
கன்னவிற்றோள், 130, 135.
கன்னிப்பெண், 103.
கனல் - அழல், 115.
கனலுதல் - எரிதல், 10.
கனலோன் - சூரியன், 115.
கனன்று - சினந்து, 56.
கனை - செறிவு, 93, 100.
கனைகழல் - செறிந்தகழல், 100.
கனைதுயில் - மிக்க உறக்கம், 93.
கனையிருள் - செறிந்த இருட்டு, 142.
கா - (கற்பகச்) சோலை, 131.
காசினி - பூமி, 106.
காஞ்சிமாராய், 142.
காட்சி - தரிசனம், 124. [139.
காட்டிய - காட்டுவான்வேண்டி, 89,
காட்டிற் சிள்வீடு ஒலித்தல், 4.
காடு - சுடுகாடு, 125; வனம், 4, 5.
காதல் - அன்பு, 144. [விழைவு, 135.
காதலசெய்காமம் - ஆசைபண்ணும்
காந்தள் - காந்தட்பூ, 50, 80, 111.

பாலைப்பண், 160.
பாவியான பகல், 137.
பாழ் - வறுமை, 26.
பாழி - வலி, 63; வெற்றி, 66.
பாற்றினம் - கழுகும் பருந்தும், 5.
பாறல் - கெடல், 55.
பான்மை - முறைமை, 2.
பிடி - பெண்யானை, 77.
பிடித்தாய் - பலகறை, 76.
பிடிபோல அசைந்து பெயர்ந்து ஆடும் கூத்து, 162.
பிண்டம் - சோற்றுத்திரளை, 29.
பிண்டி - ஒருவகை உணவுப்பொருள், தருப்பணம், 22.
பிணக்கு - அரில், நுவக்கு, 44, 117.
பிணர் - சருச்சரை, 140.
பிணன் - பிணம், 115.
பிணைய - தழுவ, 142. [ஆரம், 142.
பிணையாரம் - மூட்டுவாயினையுடைய
பிரளயம் - வெள்ளம், 17.
பிழிமகிழ் - பிழியுமது, 17. [118.
பிள்ளை - காரிப்புள், 18; மகன், 16,
பிள்ளையார் - முருகவேள், 12.
பிறங்க - பெருக்க, 7, 15.
பிறங்கிய - மிகுந்த, 38.
பிறை, 107.
பின்பகல் - உச்சிக்குப்பின், 21.
பின்விளைவதையறிதற்கு விரிச்சியும் சொகினமும் பார்த்தல், 121.
பின்னரும் - இரண்டாவதும் (மறுபடியும்), 136.
பின்னை - பின்பு, 102. [155.
பீர் - பீர்க்கு, 136; பீர்க்கம்பூ, 148,
பீர்பூப்ப - பீர்க்கம்பூப்போலப் பசப்ப,
பீலி - மயிற்றோகை, 14, 115. [155,
பீலியணிந்த வாத்தியம், 14.
புகலி - புகுமிடம் 51; வெற்றி, 97.
புகல - விரும்ப, 8, 22, 38, 78, 84.
புகழ், 14, 51.
புகழ்ந்தோருக்குக் கொடுப்பதினும் உழைத்தோருக்குக்கொடுப்பது இன்றியமையாதது, 36.
புகழ்நிற்கும் உயிர்நில்லா, 51.
புகழ் பூமியில் நிலைக்குமென்பது, 122.
புகழ்மாலை சூடுதல், 83.
புகமுகம் புழகமென நிற்றல், 161.
புகன்ற - விரும்பிய, 138.
புகன்று - விரும்பி, 16.
புகா - உணவு, 116.
புகை - தூமமணி, 114.
புகையழல் - மூளும்தழல், 120.
புடை - பக்கம், 114.
புடைப்ப - அலைப்ப, 39. [79, 147.
புடைவை - ஆடவர் உடுக்கும் ஆடை,
புண்ணியதீர்த்தம், 58. [தல், 10.
புண்மொழிதல் - நிமித்தஞ்சொல்லு
புண்வெய்துயிர்த்தல், 32.
புணர்ப்பு - துணை, 120.
புணராமல் - கூடாமையாலே, 133.
புணை - தெப்பம், 39, 136, 141, 149.
புதவு - கதவு, 53.
புயல் - மழை, 95.
புரவலன் - அரசன், 89; உபகாரி, 99.
புரி - முறுக்கு, 109.
புரிசை - மதில், 45. [124.
புரிந்துகண்ட - விரும்பித்தெளிந்த,
புரிந்தோர் - விரும்பியவர், 119.
புரிவளை - முறுக்குவளை, 123, 136.
புரிவு - தப்புதல், 82; பிரியம், 159.
புரைப்பு - ஒப்பு, 15.
புரையோர் - உயர்ந்தோர், 57.
புல்லற்கூறியது - ஏசியது, 143.
புல்லார் - பகைவர், 11.
புல்லென்றனா, 122. [ணினோ, 124.
புலங்கடந்தோர் - இந்திரியசயம் பண்
புலத்தல் - முனிதல், 144. [108.
புலந்துரைத்தல் - ஊடிச்சொல்லல்,
புலம்பு - தனிமை, 117, 136, 140, 142, 145.
புலர்தல் - அகலப்போதல், 40.
புலர்விடியல் - பொழுது புலரும் விடியற்காலம், 108.
புலரியம்போது-விடியற்காலம், 144.
புலவர் - அறிஞர், 2.
புலவேல் - புலால்நாறும் வேல், 111.
புலாழி - புலால் நாற்றத்தினையுடைய சக்கரம்; 'புல' என்பதனுள் அகரம் தொக்கது, 40.


Dr. U. V. S. IYER LIBRARY
22105